[25th January 1961]

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that comparatively speaking other Governments in the country are sponsoring foreign studies of students, who show capacity for further studies whereas this Government do not undertake to send even one student for foreign studies? Will the Government therefore revise their policy and encourage studies of more number of students in foreign countries?

THE HON. SRI C. SUBRAMANIAM : Even from our State, many students are going to foreign countries for further studies. This delusion that stulies only in foreign countries are progressive and so we should send students there, should go. It is only for essential training we should go to foreign countries.

SRI A. VEDARATHNAM : நம்முடைய நாட்டிலே பொறியியல் கல்லூரியிலும், மருத்துவக் கல்லூரியிலும் இடம் கிடைப்பது ரொம்பவும் கிராக்கியாக இருப்பதினாலே, அந்த இரு துறைகளிலுள்ள மாணவர்களை வெளி நாடுகளுக்கு அனுப்பி, அங்கு பயிற்சி பெற்று, நம் நாட்டிலுள்ள பற்றுக்குறையைப் பூர்த்தி செய்ய அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுமாதிரி பட்டப் படிப்பு அளவிலேயே வெளிநாடுகளுக்குச் செல்வதைத் தவிர்க்க வேண்டுமென்பது என்னுடைய கருத்தாகும். அப்படி வெளி நாடுகளுக்கு பட்டப் படிப்பு அளவிலே செல்லுவதால், அந்நிய செலாவணி அநாவசியமாக செலவழிக்கப்படுகிறது. அதோடு அங்கு போய் பெறுகின்ற பயிற்சியும் நம் நாட்டுக்கு உரிய முறையில் இல்லாமல் இருக்கின்றது. ஆகவே வெளிநாடுகளுக்குச் செல்லுவதென்றால், இங்கு பட்டம் பெற்று அனுபவம் சற்று ஏற்பட்டதற்குப் பிற்பாடு அங்கு விசேஷ பயிற்சி பெறுவதற்காகச் சென்றால், அதன் மூலமாக நல்ல பலன் ஏற்படுமே யொழிய, அனுபவமில்லாமல் பட்டப் படிப்புக்காக மட்டும் முதன் முதலிலேயே போவது அவ்வளவு பலனளிக்காது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

*Harijan Colonies (lights)*

* 172 Q.—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே ஹரிஜன காலனிகளிலுள்ளத் தெருக்களுக்கு மின்சார விளக்குகள் போடுவதற்காக ஒதுக்கப்பட்ட தொகையிலே 1960-ம் வருடம் வரைக்கும் எவ்வளவு தொகை செலவழிக்கப்பட்டது?

THE HON. SRI RAMAIAH : The attention of the Hon. Member is invited to the answer[a] placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஸார், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரம் விஸ்தரிக்கப்படும் என்று கவர்னர் பெருமான் அவர்கள் உரையிலே

---

[a] Printed as Appendix II on page 581 infra.

25th January 1961]

தெரிவிக்கப்பட்டிருந்தது. ஆனால் மேஜை மீது வைக்கப் பட்டுள்ள அறிக்கையில் பார்த்தால், ஹரிஜனங்களுடைய தெருக்க ளுக்கெல்லாம் மின்சார லைட் வசதி செய்து கொடுக்க 10 ஆண்டு களுக்கு ஸ்கீம் போடப்பட்டு இருக்கிறது என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்த படி, இனிமேல் லைட் போடுவதென்றால் அந்தந்தப் பஞ்சாயத் துக்கள் போடும்போது அதுவும் சேர்ந்து விடுகிறது. அதனாலே போடப்படாமல் இருக்கிற ஹரிஜனத் தெருக்கள் 6 அல்லது 7 ஆயிரம் தான் இருக்கும். இதற்கு 10 வருஷம் ஸ்கீம் போட்டு, ஹரிஜன நிதியிலிருந்து எடுத்து செலவு செய்யாமல், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இதைச் சேர்த்துக்கொள்ள சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI V. RAMAIAH: மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே எடுத்துக் கொள்ளப்படும் எல்லாக் கிராமங்களிலு முள்ள ஹரிஜன காலனிக்கும் மின்சார வசதி கிடைக்கும். இப்போது இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லக்கூடிய நேரத்திலே குறிப்பிடுவது என்னவென்றால், ஆரம்பத்திலிருந்து விட்டுப்போன ஹரிஜன காலனிகளுக்குத் துரிதமாக மின்சார வசதி கொடுக்க வேண்டுமென்பதேயாகும். இரண்டு வருஷங்களுக்கு முன், அரசாங்கம் இதைப் பரிசீலனை செய்து ஹரிஜன நல இலாகாவுடன் கலந்து பேசி, இப்படி விட்டுப்போன ஹரிஜன காலனிகளுக்கு மின்சாரம் கிடைப்பதற்கு ஒரு திட்டம் போட்டிருக்கிறோம். அந்த திட்ட அடிப்படையிலே கடந்த சில ஆண்டுகளாக பல கிராமங்களுக்கு, ஹரிஜன காலனிகளுக்கு மின்சாரம் கொடுத்திருக் கிறோம். மீதமுள்ள அப்படிப்பட்ட கிராமங்களுக்கு இன்னும் துரிதமாகக் கொடுக்க பரிசீலனை செய்யவேண்டுமென்று அதிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

SRI R. KRISHNASAMI NAIDU: கிராம பஞ்சாயத்துப் பிரதேசங்களிலுள்ள ஹரிஜன காலனிகள் விஷயத்திலே, அந்த பஞ்சாயத்துக்கு ஏற்கெனவே மின்சாரம் இல்லாமல் இருந்தால், அப்படிப்பட்ட ஹரிஜன காலனிகளுக்கு மின்சாரம் கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா? மின்சாரமே இல்லாத கிராமப் பஞ்சாயத்துக்கு அருகிலே உள்ள ஹரிஜனக் காலனிகளுக்கு மின்சாரம் கொடுப்பது இதனால் தடைப்படுமா?

THE HON. SRI V. RAMAIAH: மின்சாரம் அறவே இல்லாத கிராமங்களுக்கு கிராம விஸ்தரிப்புத் திட்டக் காலத்திலே விஸ்தரிக்க முடியும். இந்தக் கேள்வியிலே கனம் அங்கத்தினர் கேட்டிருப்பது விஸ்தரிக்கப்பட்ட கிராமங்களுக்குப் பக்கத்திலே ஹரிஜனக் காலனியிருந்தால், அப்படிப்பட்ட கிராமங்களுக்கு இதற்கு முன்பு விஸ்தரிக்க முடியாமல் போய்விட்டதே, அதற்கு விசேஷ ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்பதாகும். அதற்குத் தான் விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது என்று சொன்னேன்.

SRI P. G. MANICKAM : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் கூடிய சீக்கிரம் இதுபற்றி கவனித்து விளக்குகள் போடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுவதற்கு பரிசீலனை செய்து இருப்பதாகத் தெரிவித்தார்கள். ஆகவே அதை கூடிய சீக்கிரம் கவனித்து செய்வதற்கு சர்க்கார் முன்வருவார்களா என்று அறிய விரும்பு கிறேன்.

(பதில் இல்லை.)

*Cauvery Irrigation Areas*

* 173 *Q.*—SRI K. R. NALLASIVAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காவிரிப்பாசனப் பிரதேசங்களில் தண்ணீர் விடுவது கட்டுப்படுத்தப்பட்டுள்ளதா ?

(இ) ஒவ்வொரு நிலத்துக்கும் எத்தனை நாட்களுக்கு ஒரு முறை தண்ணீர் கிடைக்கும் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) No, Sir. There had been no restriction in supply in any of the areas fed by Cauvery old ayacut viz., Cauvery delta, ayacut under Tiruchi channels, etc., New ayacuts under the New Kattalai High Level Canal and Pullambady Canal are being supplied only when surplus flows are available in the Cauvery.

(இ) Does not arise.

9-00 p.m. SRI K. R. NALLASIVAM : தண்ணீரைக் குறைத்துப் பாய்ச்சுவதன் மூலம் ஒன்று, விளைச்சலை அதிகப்படுத்த முடியும். மற்றொன்று, அப்படி செய்யப்படுவதால் இன்னும் அதிகப்படியான நிலங்களை சாகுபடிக்கு கொண்டு வர முடியும். ஆகவே காவேரியில் தண்ணீரைக் கட்டுப்படுத்தி, அதனால் தஞ்சாவூரிலே இன்னும் அதிகப்படியான விளைச்சல் செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்யுமா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : தஞ்சாவூரிலே அப்படித் தண்ணீரைக் கட்டுப்படுத்தி கொடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டுதான் வருகிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI R. SRINIVASA IYER : ஸார், தண்ணீரைக் குறைத்து விடுவதைப்பற்றி பட்டுக்கோட்டை அரசினர் ஆராய்ச்சிப் பண்ணையில் ஐந்து வருஷங்கள் ஆராய்ச்சி செய்து, தண்ணீரை அப்படி ரொம்பவும் குறைப்பதினால், பயிர்கள் கெட்டுப் போகின்றன. அதோடு விளைச்சலும் குறைகிறது என்று கண்ட விஷயம் சர்க்காருக்குத் தெரியுமா ? ஆகையினாலே, விளைச்சலுக்கு முக்கியமாக உள்ள தண்ணீரைக் குறைக்காமல், தண்ணீர் குறைந்து விடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யாமல், இப்போது இருக்கும் அளவிலேயே தண்ணீர் விட சர்க்கார் முயற்சி செய்வார்